உ

கடவுள் துணை.

நல்லாற்றூர் அல்லது துறைமங்கலம்
சிவப்பிரகாசசுவாமிகள்
அருளிச்செய்த

# பழமலைநாதர்
# பிக்ஷாடன நவமணிமாலை.

இஃது - அஷ்டாவதானம்
பூவை
கலியாணசுந்தரமுதலியாரால்
பரிசோதிக்கப்பட்டு
சென்னை-சூளை
நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1892ஹு.

பழமலைநாதர்

## பிக்ஷாடன நவமணிமாலை

நங்குற்றந் தீர்க்கும்பழமலைநாதர்க்கு
நற்பலிகொண், டங்குற்றுமென்றுகில்
போக்கினள் வெற்றனை யாகியங்தோவி
ங்குற்றனே யெனவெம் பெருமானிவ்வி
ருநிலத்திற், றங்குற்றம்பார்க்குமருவரு
ளரோவெனத்தாழ்ந்தனளே. (க)

குன்று முதுகுன் றுடையானிலாத
வெண்கோவணத்தான், றன்று மறைக்
கைவிரன்மூன்று காட்டித்தனங் குறித்
து,நன்றுகவித்தனேபிச்சையுண்டோசொ
ன் னறுநுதலா,யென்றுனிரண்டத்தனே
யுளகோடி யென்றிட்டனளே. (உ)

இப்பாத்திரந்தலை கிழாப்பிடித் தனே
யென்னைமுன்ர். தப்பாப்பலி. கொண்ட

றிந்திலையோ வென்த் தாழ்குழலாள், செப்பார் பணைமுலையாய் நிலத்தேபலி சிந்தியிட்டா, யெப்பாத்திரத் திலுமிட் டறியாய் கொன்முன் னென்றனரோ.

வேட்டனமாதுகை தாழ்த்திடமாமு துவெற்பர்பலி,யோட்டினை நீதொடலா மோவெனவுமையுந்தொடலாம், வீட்டி னில் யானெனவேயவர்தாமிது வேண்டு வைகோல், யாட்டினின்பாலெனமூலமு மாமென்ப தென்றனரோ. (ச)

மாண்டவெலும்பணி கோலமொடே பலிவாங்கிடுதற், கிண்டுவருமுதுகுன்று டையீருமை யான்மிடற்றி, னீண்டவுகி ருறுத் தாதணேவேனென்று நீர்தலையை த், திண்டவுமதுபலிப்பார்த் திரமென்சி ரிக்கின்றதே. (ரு)

வானோர்தொழுநின் பலிப்பாத்திரத் தைவனைந்ததுநீ, தானோ வெனச்சக்கரந் தான் சுழற்றத் தருங்குயத்தி, யானோர் குயவன்மெய் யென்றேமுதுகுன் றிறை யியம்ப, நானோவொருசிற்றிடைச்சியெ ன்றுளந்நொறுநுதலே. (சு)

பங்கயமன்னவிழியார் முதுகுன்றன் பாத்திரத்தி லங்கையிலேயு மொடுவெண் டு வீழநல்கவென வெங்கையில் வந்து தெமதாகவேவழக்கென்றுசெட்டி, மங் கையர் தங்கட்கிருங்கூடலிலிடவைத்த னரே. (எ)

நீருக்குத்தக்க சடையார் முதுகுன்ற ர்நேடியுங்க, ளூருக்குட்பிச்சையென்று ற்றேமுண்டாயினுமா மினென, வாரு க்குத் தக்கமுலையாதர்குளர் மற்றொரு

வர், யாருக்குக்கிட்டுமெதுசோறு நீர்கொ
ளுமென்றனரோ. (அ)

முழங்குந்துடியொடுபிச்சையென்றே
முதுகுன்றர்வரச், சழங்குமுலைமுதியா
ளென்பலியெனத் தம்மனையில், வழங்கு
மனமென்றனர்புறம் போந்து வளர்மு
லையாள்; விழுங்குமனம்பகற்போதுகொ
ள்வாயென்றுவேண்டினளே. (கூ)

பிச்சாடனநவ ரத்தினமாலையைப் பீடு
பெறத், தைச்சான்றுறைமங்கலமுறை
சிவதயாபரனும், பொய்ச்சார்பதனையொ
ழிக்குஞ் செழும்புலியூர்ப்புனித, னற்
சார்புசார்ந்த சிவப்பிரகாசநவமணியே.

பிக்ஷாடன நவமணிமாலை.

முற்றிற்று.

